அந்தரங்கமானது



# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)

## 14 - கத்தோலிக்க திருமறை

புள்ளி வழங்கும் திட்டம்



இந்த விடைத்தாள் பரீட்சகரின் நன்மைக்காக தயாரிக்கப்பட்டுள்ளது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடலின்போது முன்வைக்கப்பட்ட கருத்துக்களுக்கேற்ப இதில் சில மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன.

*இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளது.*

# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த (சா.தர)ப் பரீட்சை – 2022 (2023)

## 14 – கத்தோலிக்க திருமறை
## புள்ளி வழங்கும் திட்டம்

**I வினாப்பத்திரம்**

**பல்தேர்வு வினாக்கள் 01 - 40** **1 x 40 = 40 புள்ளிகள்**

**II வினாப்பத்திரம்**
**1 ஆம் வினா (கட்டாயமானது)**
ஒவ்வொரு பிரிவுக்கும் 2 புள்ளிகள் விதம் பத்து வினாக்கள் **2 x 10 = 20 புள்ளிகள்**

**2 முதல் 7 ஆம் வினாக்கள்**
தெரிவு செய்யப்பட்ட 4 வினாக்களுக்கு **4 x 10 = 40 புள்ளிகள்**
**மொத்தம் - 100 புள்ளிகள்**

**2 வினா**

(i) பகுதி புள்ளிகள் 02
(ii) பகுதி புள்ளிகள் 03
(iii) பகுதி புள்ளிகள் 05 = 10 புள்ளிகள்

**3 வினா**

(i) பகுதி புள்ளிகள் 02
(ii) பகுதி புள்ளிகள் 03
(iii) பகுதி புள்ளிகள் 05 = 10 புள்ளிகள்

**4 வினா**

(i) பகுதி புள்ளிகள் 02
(ii) பகுதி புள்ளிகள் 03
(iii) பகுதி புள்ளிகள் 05 = 10 புள்ளிகள்

**5 வினா**

(i) பகுதி புள்ளிகள் 02
(ii) பகுதி புள்ளிகள் 03
(iii) பகுதி புள்ளிகள் 05 = 10 புள்ளிகள்

**6 வினா**

(i) பகுதி புள்ளிகள் 02
(ii) பகுதி புள்ளிகள் 03
(iii) பகுதி புள்ளிகள் 05 = 10 புள்ளிகள்

**7 வினா சிறுகுறிப்பு இரண்டிற்கு**

05 + 05 = 10 புள்ளிகள்

**மொத்தம் 04 x 10** **= 40 புள்ளிகள்**

**வினாத்தாள் I மொத்தம் 40 புள்ளிகள் + வினாத்தாள் II மொத்தம் 60 புள்ளிகள்** **100 புள்ளிகள்**

## க.பொ.த (சாதாரண தர)ப் பரீட்சை - 2022(2023)

### விடைத்தாள்களுக்குப் புள்ளியிடலுக்கான பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன் பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. சகல உதவிப் பரீட்சகர்களும் விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற மைப் பேனாவை பயன்படுத்தவும்.
2. பிரதம பரீட்சகர் ஊதாநிற மைப்பேனாவைப் பயன்படுத்த வேண்டும்.
3. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும் போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
4. இலக்கங்களை எழுதும் போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, ஒப்பம் இடவும்.
5. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பின்னங்களாகப் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் □ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.
6. எண்கணித பரீட்சகரினால் புள்ளிகள் பிழையற்றது என உறுதிப்படுத்த நீலநிற அல்லது கறுப்புநிறப் பேனாவினை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ..................................................................... ✓ $\frac{4}{5}$
.....................................................................
.....................................................................

(ii) ..................................................................... ✓ $\frac{3}{5}$
.....................................................................
.....................................................................

(iii) ..................................................................... ✓ $\frac{3}{5}$
.....................................................................
.....................................................................

(03) $\quad (i)\ \frac{4}{5} + (ii)\ \frac{3}{5} + (iii)\ \frac{3}{5} = \boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள்**

**1. துளைத்தாள் தயாரித்தல்**

I. புள்ளி வழங்கும் திட்டத்தின் படி சரியான தெரிவைத் துளைத்தாளில் அடையாளமிடவும்.
II. அவ்வாறு அடையாளமிடப்பட்ட இடத்தை வெட்டி நீக்கித் துளைத்தாளைத் தயாரிக்கவும்.
III. துளைத்தாளை விடைகளின் மீது சரியாக வைத்துக் கொள்ளக்கூடியதாகச் சுட்டெண் அடைப்பையும் வெட்டி நீக்கவும். சரியான விடைகளின் எண்ணிக்கையைக் காட்டும் அடைப்பையும் வெட்டி நீக்கவும்.
IV. சரியான, பிழையான விடைகளை குறிப்பிடக்கூடியதாக ஒவ்வொரு வரிசைக்கும் இறுதியில் வெற்று நிரையொன்றை வெட்டி ஏற்படுத்திக் கொள்ளவும்.
**V. வெட்டிக்கொண்ட துளைத்தாளில் பிரதம பரீட்சகரிடம் கையொப்பம் பெற்று அங்கீகரித்துக் கொள்ளவும்.**

2. **அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்து விட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.**
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை √ அடையாளத்தாலும் பிழையான விடையை X அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் எழுதவும். அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை மற்றும் கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளினால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும், **பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் √ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.**
2. புள்ளிகளை குறிப்பிடும் போது ஓவலண்ட் கடதாசியின் இடது பக்க நிரலைப் பயன்படுத்தவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன்பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக **2 இலக்கங்களில் பதியவும்.** வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டிவிடவும்.
4. மொத்தப் புள்ளிகளை கவனமாக கூட்டி முன்பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் ஒவ்வொரு விடைக்கும் வழங்கப்பட்டுள்ள புள்ளிகளின் தொகையினை ஒவ்வொரு பக்கமாக கூட்டவும். அக்கூட்டுத்தொகை உங்களால் முன்பக்கத்தில் மொத்தம் எனக் குறிப்பிட்ட மொத்தபுள்ளிகளுக்கு சமமானதா? என பரீட்சிக்கவும்?

**★ புள்ளிப்பட்டியல் தயாரித்தல்**

I. ஒரு வினாப்பத்திரம் உள்ள பாடங்கள் தவிர ஏனைய சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்பட மாட்டாது.

II. ஒவ்வொரு வினாப்பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியான புள்ளிப்பட்டியலில் பதியப்படவேண்டும்.

III. வினாப்பத்திரம் I இற்கான புள்ளிப்பட்டியலில் **"Total Marks"** என்ற நிரலில் பதிந்து **எழுத்திலும் எழுத வேண்டும்.**

IV. வினாப்பத்திரம் II இற்கான புள்ளிப்பட்டியலை தயார் செய்யும் போது பகுதிப் புள்ளிகளைப் பதிவதோடு வினாப்பத்திரம் II இன் இறுதிப் புள்ளிகளை புள்ளிப் பட்டியலில் **"Total Marks"** என்ற நிரில் பதியவும்.

V. 43 சித்திரப் பாடத்திற்குரிய I,II மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியிலில் பதிந்து **எழுத்திலும் எழுத வேண்டும்.**

VI. 21 - சிங்களமொழியும் இலக்கியமும், 22 - தமிழ்மொழியும் இலக்கியமும் ஆகிய இரு பாடங்களும் வினாப்பத்திரம் I இற்குரிய புள்ளிப் பட்டியிலில் பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும். வினாப்பத்திரம் II, III இற்கான பகுதிப் புள்ளிகளை உள்ளடக்கி அவ் வினாப்பத்திரத்தின் மொத்தப் புள்ளிகளை, புள்ளிப்பட்டியலில் பதிய வேண்டும்.

**முக்கிய குறிப்பு:**

I. சகல சந்தர்ப்பங்களிலும் ஒவ்வொரு வினாப்பத்திரத்திற்கும் உரிய முழுப் புள்ளியானது முழுத்தானத்தில் புள்ளிப் பட்டியிலில் பதியப்படுதல் வேண்டும். எந்த விதமான காரணங்களிற்காகவும் வினாப்பத்திரத்தின் இறுதிப் புள்ளியானது தசம தானங்களில் பதியப்படலாகாது.

II. புள்ளிப் பட்டியலின் சகல பக்கங்களிலும் புள்ளிகளைப் பதிந்த உதவிப்பரீட்சகர், புள்ளிகளை சரிபார்த்த உதவிப்பரீட்சகர், மதிப்பீட்டுப் புள்ளிகளை உறுதிப்படுத்தும் எண்கணித பரீட்சகர் மற்றும் பிரதம பரீட்சகர் தமது குறியீட்டு இலக்கத்தை எழுதி கையொப்பமிட்டு உறுதிப்படுத்துவது கட்டாயமாகும்.

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**14 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)

කතෝලික ධර්මය I, II
கத்தோலிக்கத் திருமறை I, II
Catholicism I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## கத்தோலிக்கத் திருமறை I

அறிவுறுத்தல்கள் :

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
* உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (x) இடுக.
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** பழைய ஏற்பாட்டில் உள்ளடக்கப்பட்டுள்ள மீட்பின் வரலாற்றின் நோக்கம்
(1) மனிதனின் படைப்பை விபரிப்பதாகும்.
(2) பாவத்தின் தொடக்கத்தினை விபரிப்பதாகும்.
(3) இறை நம்பிக்கையை வளர்ப்பதாகும்.
(4) யூத வரலாற்றினை நூலாக்கம் செய்வதாகும்.

**2.** தூய பவுலின் மறைத்தூதுப் பணி குறிப்பிடப்பட்டுள்ள நூல்
(1) திருவெளிப்பாட்டு நூல் ஆகும்.
(2) புனித லூக்கா நற்செய்தியாகும்.
(3) திருத்தூதர் பணிகள் நூலாகும்.
(4) புனித மத்தேயு நற்செய்தியாகும்.

**3.** திருவெளிப்பாட்டு இலக்கியத்தில் இஸ்ராயேல் மக்களை அடையாளப்படுத்தும் இலக்கக் குறியீடு
(1) 12 ஆகும். (2) 10 ஆகும். (3) 8 ஆகும். (4) 6 ஆகும்.

**4.** நன்மையையும் தீமையையும் பகுத்தறிந்து, நன்மையைச் செய்வதற்கு நமக்குத் தேவைப்படுவது,
(1) ஞானம் ஆகும்.
(2) தேவபயம் ஆகும்.
(3) அறிவு ஆகும்.
(4) தேவ பக்தியாகும்.

**5.** தொடக்கத் திருச்சபையில் பந்தியில் பரிமாறுவதற்கு நியமிக்கப்பட்ட திருத்தொண்டர்களின் ஓர் பண்பாக விளங்குவது
(1) செயல் திறமை ஆகும்.
(2) செல்வந்தம் ஆகும்.
(3) நல்ல உடல் நலம் ஆகும்.
(4) ஞானம் நிறைந்தமை ஆகும்.

**6.** தூய பவுல் கிறிஸ்துவின் அழைப்பைப் பெற முன்னர் கிறிஸ்துவைப் பின்பற்றியவர்களைத் துன்புறுத்தியது,
(1) அவர் ஓர் உரோமைக் குடிமகனாக இருந்தமையாலாகும்.
(2) அவர் யூத மதத்தின்மேல் கொண்ட தீவிர பற்றினாலாகும்.
(3) அவர்களின் செல்வத்தை அபகரிக்கவாகும்.
(4) அவர்கள் ஒற்றுமையாக வாழ்ந்தமையைக் கண்டதினாலாகும்.

**7.** "நீர் மெசியா வாழும் கடவுளின் மகன்" என வெளிப்படுத்தியவர்
(1) தூய பவுல் ஆவார்.
(2) தூய யோவான் ஆவார்.
(3) தூய பேதுரு ஆவார்.
(4) தூய அந்திரேயா ஆவார்.

8. பின்வரும் நிகழ்வுகளின் மீது உங்கள் கவனத்தைச் செலுத்தவும்.
A - மறைத்தூதுப் பணிக்காக பிரான்சிஸ்கன் மறைப்போதகர்கள் இலங்கைக்கு வருகைதரல்.
B - இயேசு சபை மறைப்போதகர்கள் இலங்கைக்கு வருகைதரல்.
C - அனைத்துப் பாடசாலைகளிலும் புரட்டஸ்தாந்து மதம் மட்டும் கற்பிக்கப்படல்.
D - கிறிஸ்தவர்கள் கண்டி இராச்சியத்துக்குள் குடியேறுதல்.
E - அருட்பணி யாக்கோமே கொன்சல்வேஸ் அடிகளார் இலங்கைக்கு வருகைதரல்.
மேற்கூறிய நிகழ்வுகளில் போர்த்துக்கேயர் கரையோரப் பகுதிகளை ஆட்சி செய்த காலத்தில் இடம்பெற்றவற்றைக் குறிக்கும் எழுத்துக்கள் யாவை?
(1) A யும் B யும் ஆகும். (2) A யும் E யும் ஆகும்.
(3) B யும் C யும் ஆகும். (4) B யும் D யும் ஆகும்.

9. இயேசு இவ்வுலகை விட்டுப் பிரிய முன்னர் நித்தியத்திற்கும் நம்மோடு தங்கியிருக்கப் பெரிய வியாழன் அன்று நிறுவிய அருளடையாளம் ஆவது
(1) திருமுழுக்கு ஆகும். (2) உறுதிப்பூசுதல் ஆகும்.
(3) திவ்விய நற்கருணை ஆகும். (4) ஒப்புரவு ஆகும்.

10. "இந்நாள் உங்களுக்கு ஒரு நினைவு நாளாக விளங்கும் இதனை ஆண்டவரின் விழாவாக தலைமுறைதோறும் கொண்டாடுங்கள். இந்த விழா உங்களுக்கு நிலையான நியமமாக இருப்பதாக" இறைவனால் கொடுக்கப்பட்ட இக் கட்டளை தொடர்புபடுத்தப்படுவது,
(1) சீனாய் உடன்படிக்கையுடனாகும்.
(2) பாஸ்காத் திருவிழாவுடனாகும்.
(3) பெந்தக்கோஸ்து விழாவுடனாகும்.
(4) வாக்குப் பண்ணப்பட்ட பூமிக்குள் நுழைவதுடனாகும்.

11. பழைய ஏற்பாட்டில் பலி செலுத்துவதன் ஒரு நோக்கமாக விளங்கியது
(1) பாவங்களுக்குப் பரிகாரம் செய்வதாகும்.
(2) நோய் பிணிகளிலிருந்து விடுபடுவதாகும்.
(3) விரும்புவதை, எதிர்பார்ப்பதைப் பெற்றுக்கொள்ளுவதாகும்.
(4) கல்வாரிப் பலியை நிறைவுபெறச் செய்வதாகும்.

12. "நான் விரும்புவது பலியை அல்ல, இரக்கத்தையே விரும்புகின்றேன் ..." இவ்வாறு குறிப்பிட்ட இறைவாக்கினர்
(1) எலியா (2) எரேமியா (3) ஒசேயா (4) நாத்தான்

13. நமது குடும்பம் வாழும் இல்லம் புனிதமான இடமாக இருப்பது
(1) குடும்பத்தில் நாங்கள் சந்தோசமாக வாழ்வதனாலாகும்.
(2) சமுதாயத்தில் மிகச் சிறிய அலகு குடும்பமாக இருப்பதனாலாகும்.
(3) குடும்பம் நமது அன்னியோன்னிய தொடர்புக்கு உதவுவதாலாகும்.
(4) கிறிஸ்து பிறந்ததும் வளர்ந்ததும் ஓர் குடும்பத்திலேயே என்பதனாலாகும்.

14. பிறருக்கு உரியதை அநீதியான முறையில் பெற்றுக் கொள்ளுதல், ஆசைப்படுதல் பாவமான செயலாக அமைவது, அவை எக்கட்டளைக்கு எதிரான செயலாக இருப்பதனாலாகும்?
(1) இரண்டாம் கட்டளைக்கு (2) நான்காம் கட்டளைக்கு
(3) எட்டாம் கட்டளைக்கு (4) பத்தாம் கட்டளைக்கு

15. திருத்தூதர் பணிகள் நூலில் குறிப்பிடப்படும் அனனியா, சப்பிராவின் சம்பவத்தின் மூலம் எடுத்துக்காட்டப்படுவது,
(1) தமது சொத்துக்களைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பதாகும்.
(2) நிலத்தை விற்கும்போது எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்பதாகும்.
(3) மற்றவர்களின் நலன் பற்றி மகிழ்ச்சியடைய வேண்டும் என்பதாகும்.
(4) பொய் சொல்பவர்களுக்கு பயங்கரத் தீர்ப்புக் கிடைக்கும் என்பதாகும்.

16. திருவழிபாட்டின் முதலாம் ஆண்டில் (A) ஞாயிறு தினங்களில் பயன்படுத்தப்படும் நற்செய்தி
(1) புனித லூக்காவினதாகும். (2) புனித மத்தேயுவினதாகும்.
(3) புனித மாற்குவினதாகும். (4) புனித யோவானினதாகும்.

17. திருப்பலிக்காகப் பயன்படுத்தப்படும் நிறங்களில் 'எதிர்நோக்கு, புதுவாழ்வு, வளர்ச்சி' என்ற கருத்தினைத் தரும் நிறம் ஆவது,
(1) ஊதா (2) பச்சை (3) வெள்ளை (4) சிவப்பு

18. திருவழிபாட்டில் (இறை ஆராதனையில்) அதிஉயர்ந்த வழிபாடு,
(1) திரு விவிலிய வழிபாடு ஆகும். (2) திருப்பலி ஆகும்.
(3) குணமளிக்கும் வழிபாடு ஆகும். (4) திருமணித்தியாலம் ஆகும்.

19. வரலாற்றுரீதியில் திருச்சபையில் ஏற்பட்ட பிரிவினைகளுக்கு ஏதுவான பொதுவான காரணங்களாவன,
(1) தலைமைத்துவத்திற்கான போட்டியாகும்.
(2) பற்பல நாடுகளுக்குத் திருச்சபை பரந்து சென்றமையாகும்.
(3) ஒவ்வொரு சபைத் தலைவர்கள் மத்தியிலும் ஏற்பட்ட குழப்ப நிலைகளாகும்.
(4) மனிதனுடைய பெலவீனமும் பாவ நாட்டங்களுமாகும்.

20. "அப்பா தந்தையே எல்லாம் உம்மால் இயலும்: இத்துன்பக் கிண்ணத்தை என்னிடமிருந்து அகற்றும் ஆனாலும் என் விருப்பப்படியல்ல உம்விருப்பப்படி நிகழட்டும்." இயேசு இவ்வாறு கூறியது
(1) கெத்சமனியில் செபித்தபோதாகும்.
(2) உன்னத குருவின் செபத்திலாகும்.
(3) விண்ணகத்திலிருக்கும் எம் தந்தையே என்ற செபத்திலாகும்.
(4) இலாசரை உயிர்ப்பிக்கும் முன் செய்த செபத்திலாகும்.

21. ஈசாக்கைப் பலியிட்ட சம்பவம் எழுதப்பட்டிருப்பது
(1) P மரபிலாகும் (2) J மரபிலாகும் (3) E மரபிலாகும் (4) D மரபிலாகும்

22. குருக்கள் பாரம்பரியத்திற்குரிய (P) நிகழ்வுகளாக திருவிவிலியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள விடயங்கள் இரண்டுமாவன
(1) படைப்பைப் பற்றிய முதல் கதையும் ஆதாம் ஏவாள் பாவத்திற்குள்ளானதுமாகும்.
(2) படைப்பைப் பற்றிய இரண்டாவது கதையும் நோவாவுடனான உடன்படிக்கையுமாகும்.
(3) படைப்பைப் பற்றிய முதல் கதையும் நோவாவுடனான உடன்படிக்கையுமாகும்.
(4) படைப்பைப் பற்றிய இரண்டாவது கதையும் காயின் ஆபேல் கதையுமாகும்.

23. ஒவ்வொரு கோத்திரத்திலுமிருந்து ஆறுபேர் விதம் 12 கோத்திரங்களிலும் சட்ட வல்லுநர்கள் 72 பேரைத் தெரிந்தெடுத்து திருவிவிலியத்தைக் கிரேக்க மொழியில் மொழிபெயர்க்க முன்வந்த அரசர்.
(1) முதலாம் தொலமி (2) இரண்டாம் தொலமி
(3) சைரஸ் (4) யோசியா

24. பபிலோனியா அடிமைத்தனத்திலிருந்த இஸ்ராயேல் மக்களுக்குத் தம் சொந்த நாட்டிற்குச் செல்வோம் என்ற நம்பிக்கையைக் கொடுக்கும் விதமாக இறைவாக்குரைத்த இறைவாக்கினர்
(1) எசாயா ஆவார். (2) எரேமியா ஆவார்.
(3) யோவேல் ஆவார். (4) எசேக்கியேல் ஆவார்.

25. எழுத்துவடிவம் பெறாத இறைவாக்கினர்களின் வார்த்தைகளும் செயல்களும் உள்ளடங்கியுள்ள பழைய ஏற்பாட்டு நூல்களாவன
(1) 1 - 2 சாமுவேல் மற்றும் 1 - 2 குறிப்பேடு (2) 1 - 2 அரசர்கள் மற்றும் 1 - 2 குறிப்பேடு
(3) 1 - 2 குறிப்பேடு மற்றும் 1 - 2 மக்கபேயர் (4) 1 - 2 சாமுவேல் மற்றும் 1 - 2 அரசர்கள்

26. இறைவனின் குரலுக்குப் பதில் மொழியாக "இதோ நானிருக்கிறேன் அடியேனை அனுப்பும்" எனக் கூறிய இறைவாக்கினர்
(1) எசாயா ஆவார். (2) எரேமியா ஆவார்.
(3) எசேக்கியேல் ஆவார். (4) யோவேல் ஆவார்.

27. பாடுகளின் வழியாகத்தான் உயிர்ப்பின் மகிழ்ச்சியில் பங்குகொள்ள முடியும் என்பதை வலியுறுத்தும் நற்செய்தியாளர்
(1) புனித மத்தேயு ஆவார். (2) புனித மாற்கு ஆவார்.
(3) புனித யோவான் ஆவார். (4) புனித பவுல் ஆவார்.

28. தொடக்க நூலில் 3 : 17 - 19 யின் படி இறைவன் "நிலம் சபிக்கப்பட்டுள்ளது!" எனத் தண்டனை வழங்கியது
(1) ஆதாமுக்கு ஆகும். (2) ஏவாளுக்கு ஆகும்.
(3) பாம்பிற்கு ஆகும். (4) காயினுக்கு ஆகும்.

29. "நம்பிக்கையும் செயல் வடிவம் பெறாவிட்டால் தன்னிலே உயிரற்றதாயிருக்கும்" இவ்வாறு குறிப்பிடப்படுவது
(1) புனித யோவான் நற்செய்தியிலாகும். (2) புனித யாக்கோபுவின் திருமுகத்திலாகும்.
(3) புனித லூக்கா நற்செய்தியிலாகும். (4) புனித யூதாவின் திருமுகத்திலாகும்.

30. இறைவன் ஆதிப் பெற்றோருடன் உடன்படிக்கை ஒன்றை ஏற்படுத்திக் கொண்டதன் பின்னணியாக அமைவது,
(1) காயின் ஆபேலைக் கொன்றமையாகும்.
(2) இறை திட்டத்தினை மாற்றியதலாகும்.
(3) ஆதிப் பெற்றோர் இறைவனின் குரலுக்குக் கீழ்ப்படியாமையாகும்.
(4) ஆதிப் பெற்றோரைத் தண்டிப்பதாகும்.

31. "இதோ நான் என் தூதனை அனுப்புகிறேன். அவர் எனக்கு முன் வழியை ஆயத்தப்படுத்துவார்." பழைய ஏற்பாட்டில் இவ்வாறு குறிப்பிடும் இறைவாக்கினர்.
(1) யோவேல் ஆவார்.
(2) எசாயா ஆவார்.
(3) எசேக்கியேல் ஆவார்.
(4) மலாக்கி ஆவார்.

32. 'இறைவனால் செய்ய முடியாதது ஒன்றுமில்லை' என்பதை உறுதிப்படுத்தும் புதிய ஏற்பாட்டில் ஓர் சந்தர்ப்பம் ஆவது,
(1) எலிசபெத்தம்மாள் தனது முதிர்ந்த வயதில் ஓர் குழந்தையைக் கருத்தரித்தமையாகும்.
(2) யேசு யோர்தான் நதியில் திருமுழுக்குப் பெற்றமையாகும்.
(3) திருமுழுக்கு யோவான் இயேசுவின் வழியை ஆயத்தம் செய்தமையாகும்.
(4) இறுதித் தீர்ப்புக்காக மக்களை ஆயத்தம் செய்தமையாகும்.

33. எமது வாழ்வில் இறைவனுக்குரிய இடத்தை செல்வத்திற்கும், அதிகாரத்திற்கும் கொடுக்கக் கூடாது என்னும் செய்தி அடங்கியிருப்பது,
(1) இயேசு முகம்கொடுத்த முதல் சோதனையிலாகும்.
(2) இயேசு முகம்கொடுத்த இரண்டாவது சோதனையிலாகும்.
(3) இயேசு அப்பங்களைப் பலுகச்செய்த போதாகும்.
(4) இயேசுவை மக்கள் அரசனாக்க முற்பட்ட சந்தர்ப்பத்திலாகும்.

34. இயேசு தாம் செய்த புதுமைகளினூடாக எதன் வருகையை உறுதிப்படுத்தினார்?
(1) இறை ஆட்சி
(2) இறைவனின் கட்டளைகள்
(3) இறைவனின் கோபாக்கினை
(4) இறைவனின் நீதித் தீர்ப்பு

35. இயேசு தாம் போகவிருந்த எல்லா ஊர்களுக்கும், இடங்களுக்கும் தமக்கு முன் தமது சீடர்களை இருவர் இருவராக மறைதூதுப் பணிக்காக அனுப்பியதைக் குறிப்பிடும் நற்செய்தியாளர்
(1) புனித மத்தேயு (2) புனித லூக்கா (3) புனித மாற்கு (4) புனித யோவான்

36. இழந்த மனிதமாண்பினை மீண்டும் பெற்றுத்தரும் அருளடையாளம் ஆவது,
(1) மெய்விவாகம் (2) உறுதிப்பூசுதல் (3) நோயில் பூசுதல் (4) ஒப்புரவு

37. திருத்தொண்டர்களின் திருவழிபாட்டுக் கடமைகளில் ஒன்று
(1) மக்களுக்கு ஓர் உண்மையான மேய்ப்பராயிருத்தல்.
(2) குருக்களைப் பராமரித்தல்.
(3) திருமணச் சடங்கை நிறைவேற்றுதல்.
(4) சட்டங்களைக் கடைப்பிடித்து வாழுதல்.

38. துறவற வாழ்வின் ஓர் பண்பாக விளங்குவது
(1) குழும வாழ்வு
(2) கட்சி அரசியலில் ஈடுபடுத்தல்
(3) தனித்துத் தீர்மானங்களை எடுத்தல்
(4) அரச பணியில் ஈடுபடுத்தல்

39. "கத்தோலிக்க மறைப்பாடசாலை கிறிஸ்தவனுக்கு பொதுக் குருத்துவத்தின் மூலம் இறைவாக்குப் பணியில் ஈடுபட உதவியளிக்கின்றது" இவ்வாறு குறிப்பிடப்பட்டிருப்பது,
(1) திருச்சபை சட்ட நூலில் ஆகும்.
(2) கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூலில் ஆகும்.
(3) கொரிந்தியருக்கு எழுதிய திருமுகத்திலாகும்.
(4) எபேசியருக்கு எழுதிய திருமுகத்திலாகும்

40. தைமாதம் முதலாம் திகதி கொண்டாடப்படும் புனித மரியன்னையின் திருவிழா ஆவது,
(1) புனித மரிய அன்னையின் பிறந்தநாள்
(2) புனித மரிய அன்னையின் விண்ணேற்பு
(3) புனித மரியாள் இறைவனின் அன்னை
(4) இலங்கை இராக்கினியின் திருவிழா

* *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

රහසයයි
அந்தரங்கமானது

# අ.පො.ස. (සා.පෙළ) විභාගය - 2022 (2023)
# க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)

විෂය අංකය / பாட இலக்கம்: **14**  විෂයය / பாடம்: **கத்தோலிக்கத் திருமறை**

## I පත්‍රය - පිළිතුරු
## I பத்திரம் - விடைகள்

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 3 | 11. | 1 | 21. | 3 | 31. | 4 |
| 02. | 3 | 12. | 3 | 22. | 3 | 32. | 1 |
| 03. | 1 | 13. | 4 | 23. | 2 | 33. | 2 |
| 04. | 1 | 14. | 4 | 24. | 4 | 34. | 1 |
| 05. | 4 | 15. | 4 | 25. | 4 | 35. | 2 |
| 06. | 2 | 16. | 2 | 26. | 1 | 36. | 4 |
| 07. | 3 | 17. | 2 | 27. | 2 | 37. | 3 |
| 08. | 1 | 18. | 2 | 28. | 1 | 38. | 1 |
| 09. | 3 | 19. | 4 | 29. | 2 | 39. | 1 |
| 10. | 2 | 20. | 1 | 30. | 3 | 40. | 3 |

විශේෂ උපදෙස් / விசேட அறிவுறுத்தல் } එක් පිළිතුරකට ලකුණු / ஒரு சரியான விடைக்கு **01** බැගින් / புள்ளி வீதம்

**මුළු ලකුණු / மொத்தப் புள்ளிகள் 01 × 40 = 40**

---

පහත නිදසුනෙහි දැක්වෙන පරිදි බහුවරණ උත්තරපත්‍රයේ අවසාන තීරුවේ ලකුණු ඇතුළත් කරන්න.
கீழ் குறிப்பிடப்பட்டிருக்கும் உதாரணத்திற்கு அமைய பல்தேர்வு வினாக்களுக்குரிய புள்ளிகளை பல்தேர்வு வினாப்பத்திரத்தின் இறுதியில் பதிக.

**නිවැරදි පිළිතුරු සංඛ්‍යාව** / சரியான விடைகளின் தொகை: 25 / 40

**I පත්‍රයේ මුළු ලකුණු** / பத்திரம் I இன் மொத்தப்புள்ளி: 25 / 40

**14 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)

කතෝලික ධර්මය I, II
கத்தோலிக்கத் திருமறை I, II
Catholicism I, II

## கத்தோலிக்கத் திருமறை II

※ முதலாம் வினாவுக்கும் மேலும் நான்கு வினாக்களுக்குமாக மொத்தம் ஐந்து வினாக்களுக்கு விடை எழுதுக.
※ முதலாம் வினாவுக்கு 20 புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவுக்கும் 10 புள்ளிகளும் உரித்தாகும்.

1. (i) புனித பேதுருவின் முதல் அருளுரையில் அடங்கும் இரு விடயங்களை எழுதுக.
(ii) இயேசு ஐந்தாம் கட்டளைக்குக் கொடுத்த புதிய விளக்கத்தில் அடங்கும் இரு விடயங்களை எழுதுக.
(iii) திருச்சபையில் கத்தோலிக்கம் என்ற சொல்லின் இரு பண்புகளையும் சுருக்கமாக எழுதுக.
(iv) திருப்பலி புதிய உடன்படிக்கையில் குறிப்பிடப்படும் இரு பெயர்களை எழுதுக.
(v) எதிர் நோக்கிற்கு எதிரான பாவங்கள் இரண்டினையும் எழுதுக.
(vi) ஆசைக்கு அடிமைப்பட்டு ஏவாள் எடுத்த பிழையான தீர்மானத்தின் மூலம் நமக்குக் கிடைக்கும் செய்திகள் இரண்டினை எழுதுக.
(vii) நற்செய்தியாளர் புனித லூக்காவிடமிருந்த விசேட ஆற்றல்கள் இரண்டினை எழுதுக.
(viii) இறை அரசின் மதிப்பீட்டை எடுத்துக்காட்ட இயேசு கற்பித்த உவமைகள் இரண்டின் பெயர் தருக.
(ix) திருமுழுக்கு சடங்கின்போது பயன்படுத்தப்படும் பாஸ்காத்திரி அடையாளப்படுத்தும் இரு விடயங்களை எழுதுக.
(x) சமூகப் பணிக்காக நிறுவப்பட்ட அருளடையாளங்களைக் குறிப்பிட்டு, அவற்றின் மூலம் நிறைவேற்றப்படும் பணிகள் இரண்டு எழுதுக.

2. (i) புனித பவுல் தமது திருமுகங்களை எழுதியதன் நோக்கங்கள் இரண்டினை எழுதுக.
(ii) புனித பவுலின் பெயரைப் பயன்படுத்தி வேறு நபர்கள் எழுதிய திருமுகங்கள் மூன்றினைக் குறிப்பிடுக.
(iii) புனித பவுல் தமது வாழ்வின் இறுதிக் காலத்தில் முகம்கொடுத்த பிரச்சினைகள் இரண்டினைக் குறிப்பிட்டு, இன்றைய சமுதாயத்தில் எழும் பிரச்சினைகளின் முன்னிலையில், புனித பவுலைப் போன்று நீர் எவ்வாறு செயற்படுவீர் என மூன்று காரணிகளின் மூலம் விளக்குக.

3. (i) இஸ்ரயேலர் அடிமைகளாக எகிப்தில் இருந்தபோது அவர்கள் மூலம் பெறப்பட்ட அடிமை வேலைகள் இரண்டினை எழுதுக.
(ii) பழைய ஏற்பாட்டில் பாஸ்கா செம்மறியை உண்பது பற்றிக் கொடுக்கப்பட்ட அறிவுரைகள் மூன்றினை எழுதுக.
(iii) திவ்விய நற்கருணையைப் பெறுவதற்கு நீர் உம்மை எவ்வாறு ஆயத்தம் செய்வீர் என ஐந்து காரணிகளின் மூலம் விளக்குக.

4. (i) திருத்தந்தை புனித இரண்டாம் அருளப்பர் சின்னப்பரிடமிருந்து நமக்குப் பெற்றுக் கொள்ளக்கூடிய முன்மாதிரிகைகள் **இரண்டினை** எழுதுக.
   (ii) கல்கட்டாவில் புனித அன்னை தெரேசா ஆற்றிய பணிகள் **மூன்றினை** எழுதுக.
   (iii) உமது பிரதேசத்தின் ஏழைகள், பின்தங்கியவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த உம்மால் செய்யக் கூடிய செயல்கள் **ஐந்தினை** சுருக்கமாக விளக்குக.

5. (i) எழுத்துவடிவம் பெறாத இறைவாக்கினரின் பண்புகள் **இரண்டினை** எழுதுக.
   (ii) இறைவாக்கினர்கள் இறைவாக்குரைக்கும்போது பயன்படுத்திய மூவித சொற்பதங்களையும் எழுதுக.
   (iii) எரேமியா இறைவாக்கினரின் அழைப்பிலிருந்து நமது வாழ்க்கைக்குப் பெற்றுக் கொள்ளக் கூடிய வழிகாட்டல்கள் **ஐந்தினைச்** சுருக்கமாக விளக்குக.

6. (i) கத்தோலிக்க திருமணத்தின் நோக்கங்கள் **இரண்டினையும்** குறிப்பிடுக
   (ii) கத்தோலிக்க திருமணத்திற்குள்ள சட்டரீதியான தடைகள் **மூன்றினை** எழுதுக.
   (iii) "கிறிஸ்தவ திருமணவாழ்வை வெற்றிபெறச் செய்வோம்" என்னும் தலைப்பின் கீழ் நீர் எழுதும் ஓர் கட்டுரையில் உள்ளடங்க வேண்டிய பிரதான விடயங்கள் **ஐந்தினை** எழுதுக.

7. பின்வரும் தலைப்புக்களில் **இரண்டினைத்** தெரிவுசெய்து சிறுகுறிப்பு எழுதுக.
   (i) இயேசு திருத்தூதர் தோமசுக்குக் காட்சி கொடுத்தல்.
   (ii) புனித மரியகொறற்றி.
   (iii) ஞாயிற்றுக்கிழமைகளிலும் கடன் திருநாட்களிலும் முழுத்திருப்பலியில் பங்குபற்றுதல்.
   (iv) புனித மரியா தூய திருச்சபையின் அன்னை.

* * *

1.

**(i) புனித பேதுருவின் முதல் அருளுரையில் அடங்கும் இரு விடயங்களை எழுதுக.**

- இயேசு கடவுளின் மகன்
- இஸ்ரயேல் மக்கள் அவரைச் சிலுவையில் அறைந்து கொன்றார்கள்.
- ஆயினும் கடவுள் இந்த இயேசுவை உயிர்த்தெழச் செய்தார்.
- அவர் கடவுளின் வலது பக்கத்தில் வீற்றிருக்கிறார்

**(ii) இயேசு ஐந்தாம் கட்டளைக்குக் கொடுத்த புதிய விளக்கத்தில் அடங்கும் இரு விடயங்களை எழுதுக.**

கொலை செய்யாதே, கொலை செய்கிறவர் எவரும் தண்டனைத் தீர்ப்புக்கு ஆளாவர் என்று முற்காலத்தவர்க்குக் கூறப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன்.

- தம் சகோதரர் சகோதரிகளிடம் சினங்கொள்கிறவர் தண்டனைத் தீர்ப்புக்கு ஆளாவார்.
- தம் சகோதரரையோ சகோதரியையோ முட்டாளே என்பவர் தலைமைச் சங்கத் தீர்ப்புக்கு ஆளாவார்.
- அறிவிலியே என்பவர் எரி நரகத்துக்கு ஆளாவார்.

**(iii) திருச்சபையில் கத்தோலிக்கம் என்ற சொல்லின் இரு பண்புகளையும் சுருக்கமாக எழுதுக.**

- கிறிஸ்து இயேசு திருச்சபையில் எப்போதும் உடனிருப்பது
- முழு மனுக்குலத்திற்கும் தூதுரைப் பணிக்காக அனுப்பப்படுவது
  அனைவருக்கும் பொதுவானது.

**(iv) திருப்பலி புதிய உடன்படிக்கையில் குறிப்பிடப்படும் இரு பெயர்களைத் எழுதுக.**

- அப்பம் பிட்குதல்
- ஆண்டவரின் விருந்து
- புதிய பாஸ்கா விழா
- கிறிஸ்துவின் உடலில் பங்கேற்றல்

**(v) எதிர்நோக்கிற்கு எதிரான பாவங்கள் இரண்டினையும் எழுதுக.**

- எதிர்நோக்கை இழத்தல்
- மிதமிஞ்சிய எதிர்நோக்கு

**(vi) ஆசைக்கு அடிமைப்பட்டு ஏவாள் எடுத்த பிழையான தீர்மானத்தின் மூலம் நமக்குக் கிடைக்கும் செய்திகள் இரண்டினை எழுதுக.**

- ஆசைக்கு அடிமைப்பட்டு பிழையான தீர்மானம் எடுப்பது தவறானது.
- நாம் தீர்மானம் எடுக்கும் போது மனச்சான்றுக்குச் செவிசாய்த்து அதற்குக் கீழ்ப்படிய வேண்டும்.
- தீர்மானம் எடுக்கும் போது இறைசித்தத்தின் படி முழுச் சுதந்திரத்துடன் செயற்பட வேண்டும்.

**(vii) நற்செய்தியாளர் புனித லூக்காவிடமிருந்த விசேட ஆற்றல்கள் இரண்டினை எழுதுக.**

- எழுத்தாளர்
- வரலாற்று ஆசிரியர்
- ஓவியக் கலைஞர்
- மருத்துவர்
- புனித பவுலின் இரண்டாம் மூன்றாம் தூதுரைப் பயணங்களில் இணைந்திருந்தவர்.

**(viii) இறையரசின் மதிப்பீட்டை எடுத்துக்காட்ட இயேசு கற்பித்த உவமைகள் இரண்டின் பெயர் தருக.**

- புதையல்
- முத்து
- வலை
- கடுகுமணி
- புளிப்பு மாவு
- விதைப்பவன் உவமை
- வயலில் தோன்றிய களைகள்

**(ix) திருமுழுக்கு சடங்கின் போது பயன்படுத்தப்படும் பாஸ்காத்திரி அடையாளப்படுத்தும் இரு விடயங்களை எழுதுக.**

- கிறிஸ்துவைப் பின் செல்லும் எவரும் இருளில் நடப்பதில்லை என்பதும்
- ஒளியாகிய இயேசுவின் பிள்ளை எப்போதும் ஒளியில் வாழ வேண்டும் என்பதுமாகும்.
- உயிர்த்த இயேசுவின் அடையாளம்
- பிள்ளையின் ஆன்மாவிற்கு கிடைக்கும் ஒளியைக் குறிக்கிறது.

**(x) சமூகப் பணிக்காக நிறுவப்பட்ட அருளடையாளங்களைக் குறிப்பிட்டு அவற்றின் மூலம் நிறைவேற்றப்படும் பணிகள் இரண்டு தருக.**

- குருத்துவம்
- திருமணம் } **1 புள்ளி**
  - மறைத்தூதுப் பணியை ஆற்றுதல்
  - இறைமக்கள் சமூகத்தைக் கட்டியெழுப்புதல்
  - தமதும் பிறரதும் மீட்புப் பணிக்காகக் கிடைத்த அழைப்பையும் பொறுப்பையும் நிறைவேற்றுதல்.
  - தமது குழந்தைகளை இறை விசுவாசத்தில் வளர்த்தல்.
  - மறைப் பணிகளோடு அருளடையாளங்களை வழங்குதல்.

**இரு கருத்துக்களுக்கு ஒரு புள்ளி வழங்கவும்**
**(ஒரு வினாவிற்கு இரு புள்ளிகள் வீதம் 10 x 2 = 20 புள்ளிகள்)**

**2.** கற்றல் பேறு : புனித பவுலின் வாழ்க்கையை முன் மாதிரியாகக் கொண்டு உறுதியுடன் செயற்படுவர்

**(i) புனித பவுல் தமது திருமுகங்களை எழுதியதன் நோக்கங்கள் இரண்டினை எழுதுக.**

- நிறுவிய சபைகளில் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காக
- கிறிஸ்தவ நம்பிக்கையும் அதன் கடமைகளையும் கூறுவதற்காக
- வேலைப்பளு காரணமாக சபைகளைத் தரிசிக்க முடியாமை
- கிறிஸ்துவுக்குள் புது வாழ்வை நிலைத்திருக்கச் செய்வதற்காக
- சிறைப்பட்டிருந்ததால் கிறிஸ்தவ சபைகளைத் தரிசிக்க முடியாமை
- கிறிஸ்துவின் இரண்டாம் வருகை பற்றிய தப்பறையான போதனைகளுக்குப் பதிலளிப்பதற்கு

**(ii) புனித பவுலின் பெயரைப் பயன்படுத்தி வேறு நபர்கள் எழுதிய திருமுகங்கள் மூன்றினைக் குறிப்பிடுக.**

- 2 தெசலோனிக்கர்
- 1 திமொத்தேயு
- 2 திமொத்தேயு
- தீத்து

**(iii) புனித பவுல் தமது வாழ்வின் இறுதிக் காலத்தில் முகங்கொடுத்த பிரச்சினைகள் இரண்டினைக் குறிப்பிட்டு, இன்றைய சமுதாயத்தில் எழும் பிரச்சினைகளின் முன்னிலையில் புனித பவுலைப் போன்று நீர் எவ்வாறு செயற்படுவீர் என மூன்று காரணிகளின் மூலம் விளக்குக.**

புனித பவுல் தமது வாழ்வின் இறுதிக் காலத்தில் முகங்கொடுத்த பிரச்சினைகள்

- ஆசியாவிலிருந்து வந்த யூதர்கள் கூறிய குற்றச்சாட்டுக் காரணமாக அவரை தேவாலயத்தில் வைத்துக் கைது செய்தனர்.
- இயேசுவைப்போல் புனித பவுலும் பலருடைய விசாரணைக்கு முகங்கொடுத்தார்.
- இறுதியாக புனித பவுல் உரோமைப் பேரரசினால் விசாரணை செய்யப்பட வேண்டுமெனக் கேட்டமையால் அவரை ஓர் சிறைக் கைதியாக உரோமைக்குக் கொண்டு சென்றனர்.
- உரோமையில் வீட்டுக்காவலில் வைக்கப்பட்டார்.
- புனித பவுல் இறுதியாக உரோமையில் பேரரசன் நீரோவின் கலாபனைக் காலத்தில் கி.பி 68ல் சிரச்சேதம் செய்து கொலை செய்யப்பட்டார்.

**(இவற்றுள் ஏதாவது இரு கருத்துக்கள் குறிப்பிட்டிருப்பின் இரு புள்ளிகள் வழங்கவும்.)**

புனித பவுலைப் போன்று செயற்படும் முறை

- எமக்கு வரும் துன்பங்களைக் கண்டு துவண்டுபோகாமல் நற்செய்தியை அறிவித்தல்.
- தோல்விகள் ஏமாற்றங்கள் வரும்போது கிறிஸ்துவுக்காக அவற்றைத் தாங்கிக் கொள்ளுதல்.
- பொய்க்குற்றங்கள் எம்மில் சுமத்தப்படும் போது தைரியமாக உண்மையை எடுத்துரைத்தல்.
- சுயநலமின்றி பொது நலனுக்காக உழைத்தல்.
- வருமானத்தை எதிர்பாராது பிறருக்கு மறையைப் போதித்தல்.
- பிறருடைய துன்ப துயரங்களில் பங்கெடுத்து எம்மால் இயன்றளவு உதவுதல்
- மக்களிடையே ஏற்றத்தாழ்வு பாராது அனைவரையும் ஏற்றுக்கொண்டு பணிபுரிதல்
- நற்செய்தியை அறியாத மக்களுக்கு தேடிச்சென்று நற்செய்தியைப் பரப்ப உதவுதல்
- செபத்தினூடாக பிரச்சினைகளைத் தீர்க்க முன்வருதல் தமது திறமைகளை பொதுநலனுக்குப் பயன்படுத்துதல்.

**(இதுபோன்று செயற்படும் முறைகள் ஏதாவது மூன்று குறிப்பிட்டிருப்பின் மூன்று புள்ளிகள் வழங்கவும்.)**

**(2 + 3 + 5 = 10 புள்ளிகள்)**

3. கற்றல் பேறு : பழைய ஏற்பாட்டில் பாஸ்கா உணவைப் பற்றிய விபரங்களைக் கற்று புதிய ஏற்பாட்டில் பாஸ்கா உணவிற்காக தம்மை ஆயத்தம் செய்வர்.

**(i) இஸ்ரயேலர் அடிமைகளாக எகிப்தில் இருந்தபோது அவர்கள் மூலம் பெறப்பட்ட அடிமை வேலைகள் இரண்டினை எழுதுக.**

- செங்கல் அறுத்தல்
- கட்டடங்கள் கட்டுதல்
- விவசாயம் செய்தல்
- கைத்தொழில் செய்தல்
- புதிய களஞ்சியசாலைகளைக் கட்டுதல்
- பலாத்காரமாக வேலை வாங்குதல்
- கடினவேலை
- பித்தோம் இராம்சேசு நகர்களைக் கட்டுதல்

**(ii) பழைய ஏற்பாட்டில் பாஸ்கா செம்மறியை உண்பது பற்றிக் கொடுக்கப்பட்ட அறிவுரைகள் மூன்றினை எழுதுக.**

- பாஸ்கா செம்மறி மாசற்றதும் ஒரு வயதுடையதும் ஆண்செம்மறியாகவும் இருத்தல்.
- செம்மறியைக் கொல்லுதல்.
- பாஸ்கா செம்மறியை வெட்டி அதன் இரத்தத்தை கதவின் மேல் சட்டத்திலும் இரு நிலைக்கால்களிலும் பூசுதல்.
- இறைச்சியை நெருப்பிலே வாட்டி புளியாத அப்பத்துடனும் கசப்புக் கீரையுடனும் அன்றிரவே மீதி வைக்காமல் உண்ணுதல்.
- இடுப்பில் கச்சை கட்டி கையில் கோல் பிடித்து கால்களில் பாத அணிகளை அணிந்து விரைவாக உண்ணுதல்
- ஓர் ஆட்டினை உண்ண ஒரு வீட்டில் போதிய ஆட்கள் இல்லையெனில் உண்போரின் எண்ணிக்கைக்கும் உண்ணும் அளவிற்கும் ஏற்ப அண்டை வீட்டாரைச் சேர்த்துக் கொள்ளுதல்.
- மீதியாக உள்ள செம்மறியின் இறைச்சியை எரித்தல்

**(iii) திவ்விய நற்கருணையைப் பெறுவதற்கு நீர் உம்மை எவ்வாறு ஆயத்தம் செய்வீர் என ஐந்து காரணிகளின் மூலம் விளக்குக.**

- திவ்விய நற்கருணையை உட்கொள்ள ஆன்மீக உடல் ரீதியான ஆயத்தங்களை மேற்கொள்வது அவசியமாகும்.
- சாவான பாவத்தோடு நற்கருணையை பெறுவது முறையல்ல.
- அவ்வேளையில் ஒப்புரவு அருளடையாளத்தைப் பெற்றுக் கொள்வது அவசியமாகும்.
- அற்ப பாவங்களுக்காக திருப்பலியின் மனத்துயர் வழிபாட்டின்போது மனம்வருந்தி மன்னிப்பைப் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்.
- கனமான பாவத்தினைச் செய்திருப்பின் ஒப்புரவு அருளடையாளத்தை நிறைவேற்ற முடியாத சந்தர்ப்பத்தில் நற்கருணையைப் பெற முடியாது.

- திருப்பலி ஆரம்பிப்பதற்கு குறைந்தபட்சம் ஒருமணி நேரத்திற்குள் உணவோ பானமோ உட்கொள்ளாதிருத்தல் வேண்டும்.
- ஒரு நாளுக்கு இரு தடவைக்கு மேல் நற்கருணை பெறாதிருத்தல்
- ஒவ்வொருவரும் தம்மைத் தாமே ஆன்ம சோதனை செய்தல்
- தமது சகோதரர் அயலவர்களுடன் ஒப்புரவாகுதல்
- திருப்பலி ஆரம்பம் முதல் இறுதிவரை முழுத் திருப்பலியில் பங்குபற்றுதல்.

**(மேலே தரப்பட்ட காரணிகளில் ஐந்தினை அடிப்படையாகக் கொண்டு விளக்கியிருப்பின் புள்ளி வழங்கவும்.)**

**(2 + 3 + 5 = 10 புள்ளிகள்)**

**4. கற்றல் பேறு -: திருத்தந்தை புனித 2ம் அருள்சின்னப்பர், புனித அன்னை திரேசா ஆகியவர்களின் வழ்க்கை வரலாற்றை அறிந்து ஏழை எளியோருக்கு உதவுவர்.**

**(i) திருத்தந்தை புனித இரண்டாம் அருளப்பர் சின்னப்பரிடமிருந்து நமக்குப் பெற்றுக் கொள்ளக்கூடிய முன்மாதிரிகைகள் இரண்டினை எழுதுக.**

- வறுமை இயலாமையிலும் மனத்தளர்ச்சி இன்றி வாழ்வில் வெற்றி பெற்றமை
- நோயினால் பீடிக்கப்பட்டாலும் பொறுப்புக்களைத் தவறாது நிறைவேற்றியமை
- எதிரிகளை மன்னித்தமை
- துன்ப துயரங்களையும் வேதனைகளையும் தாங்கிக் கொண்டமை
- சிறுவயதிலிருந்து இறைபராமரிப்புக்குக் கீழ்ப்படிந்தமை
- உண்மை நேர்மைக்காக குரல் கொடுத்தமை
- வாழ்வு முழுவதும் கிறிஸ்துவுக்குச் சான்று பகர்ந்தமை
- அன்னை மரியா மேல் பக்தி கொண்டிருந்தமை
- சமாதானத்திற்கு உதவி கிழக்கு மேற்கு ஜேர்மனியை ஒன்றிணைத்தமை

**(ii) கல்கட்டாவில் புனித அன்னை தெரேசா ஆற்றிய பணிகள் மூன்றினை எழுதுக.**

- கல்கத்தாவில் புனித மரியாள் கல்லூரியில் ஆசிரியராக பணிபுரிந்தார்.
- திருத்தந்தையிடம் விசேட அனுமதி பெற்று 17 – 08 – 1948ல் அன்பின் கன்னியர் சபையை ஆரம்பித்தார்.
- ஆதரவற்ற நோயாளிகள், அநாதைகள், ஏழைகள் போன்றோருக்குப் பணிபுரிய கல்கத்தாவை மத்திய நிலையமாகத் தெரிவு செய்தார்.
- வீதியோரங்களில் இருந்த சிறார்களுக்கு பாடசாலை ஒன்றை ஆரம்பித்தார்.
- சேரிகளில் வாழ்வோரைச் சந்திப்பது அவரது வழக்கமாகும்.
- மரணத்தருவாயில் இருந்த வலுவற்ற பாதுகாப்பற்றவர்களுக்கு மனிதமாண்போடு இறக்க உதவினார்.
- அடிமைப்படுத்தப்பட்ட வறிய நாடுகளுக்காக குரல் கொடுத்தார்
- அனைவரையும் அன்போடு பராமரித்தார்
- ஏழைகளுக்கு உணவு கொடுத்தார்
- இன மத வேறுபாடின்றி எல்லோருக்கும் உதவினார்.
- எயிட்ஸ் நோயளர்களுக்கு இல்லத்தை அமைத்தார்.

**(iii) உமது பிரதேசத்தில் ஏழைகள், பின்தங்கியவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த உம்மால் செய்யக் கூடிய செயல்கள் ஐந்தினை சுருக்கமாக விளக்குக.**

- அப்பிரதேச சிறார்களுக்குத் தொழில் வழிகாட்டல்களை மேற்கொள்ளல்.
- பெற்றோர்களுக்கு விழிப்புணர்வு கருத்தரங்குகளை மேற்கொள்ள பங்குத்தந்தை அருட்சகோதரிகளின் உதவியை நாடல்.
- இல்லந்தோறும் சென்று அவர்கள் குறைகளை கேட்டறிந்து தகவல்களைத் திரட்டுதல்
- திரட்டப்பட்ட தகவல்களின் அடிப்படையில் உதவிகளைப் பெற்றுக்கொடுக்க பெரியோர்களின் உதவியை வேண்டுதல்.
- தனியாகவும் குழுக்களாகவும் அவர்களுக்காக செபித்தல்.
- அவர்களை ஆலய வழிபாடுகளுக்கு அழைத்துச் செல்லுதல்.
- பெற்றோரின் அனுமதியுடன் எம்மிடம் இருக்கும் உடைகள் பாடசாலை உபகரணங்களை சிறார்களுக்கு வழங்கிஉதவுதல்.
- அவ்வாறே உணவின்றி இருக்கும் சிறார்களுக்கு எமது உணவைப் பகிர்ந்து கொடுத்தல்.
- மனித வாழ்வின் மேன்மையை எடுத்துக் காட்டுதல்
- நாங்கள் அனைவரும் இறைவனின் பிள்ளைகள் என்பதால் ஒருவருக்கொருவர் உதவிசெய்து வாழுதல்
- ஒவ்வெரு வாரத்திலும் தமது பெற்றோரிடமிருந்து கிடைக்கும் பணத்தின் ஒருபகுதியை ஏழைகளுக்கு உதவ பயன்படுத்தல்.
- ஏமைகளுக்கு உதவ தமது வருமானத்தின் ஒரு பகுதியை ஒதுக்குவதற்கு பெற்றோரை உச்சாகப்படுத்துதல்.
- இரக்கச் செயல்களுக்காக ஒரு திட்டத்தை ஆரம்பிக்க முற்படுதல் இதற்காக நண்பர்களுடன் உரையாடி தீர்மானங்களை மேற்கொள்ளல்
- ஏழைகளைச் சந்தித்தல் அவர்களை ஏழ்மையிலிருந்து விடுவிக்கும் வகையில் அவர்களுக்கு அறிவுரை வழங்குதல்
- வசதியற்ற மாணவர்களுக்கு மேலதிக வகுப்புக்களை ஒழுங்கு செய்து கற்பித்துக் கொடுத்தல்.

**(இது போன்ற கருத்துக்களை முன்வைத்து விளக்கியிருப்பின் ஐந்து விடயங்களுக்கு ஐந்து புள்ளிகள் வழங்குக.)**

**(2 + 3 + 5 = 10 புள்ளிகள்)**

**5. கற்றல் பேறு -: தமது இறைவாக்குப் பணியை உணர்ந்து சான்று பகர்வர்**

**(i) எழுத்துவடிவம் பெறாத இறைவாக்கினரின் பண்புகள் இரண்டினை எழுதுக.**

- தியானத்தில் ஆழ்ந்திருப்பர்
- குழுவாகப் பணிசெய்வர்
- தமது தூதுப் பணியை உறுதிப்படுத்த அடையாளங்களைச் செய்வர்.

**(ii) இறைவாக்கினர்கள் இறைவாக்குரைக்கும்போது பயன்படுத்திய மூவித சொற்பதங்களையும் எழுதுக.**

- ஆண்டவர் திருவாய் மலர்ந்தருளுகின்றார்.
- என்கிறார் ஆண்டவர்.
- ஆண்டவரின் வாக்கு எனக்கு அருளப்பட்டது.

**(iii) எரேமியா இறைவாக்கினரின் அழைப்பிலிருந்து நமது வாழ்க்கைக்குப் பெற்றுக் கொள்ளக்கூடிய வழிகாட்டல்கள் ஐந்தினைச் சுருக்கமாக விளக்குக.**

- எமது இயலாமையிலும் பலவீனத்திலும் இறை அழைப்பை ஏற்றுக் கொள்ளல்.
- நாம் எந்த நிலையிலிருந்தாலும் எமது கடமைகள் பொறுப்புக்களை நிறைவேற்றுதல்.
- எந்த பணியில் ஈடுபட்டாலும் இறையருளை நாடி இறைவனோடு பயணித்தல்.
- எமது சொல்லாலும் செயல்களாலும் நற்செய்திக்குச் சான்று பகர்தல்.
- பிறரின் துன்ப துயரங்களில் பங்கேற்றல்.
- எமது அழைப்பைப் புரிந்துகொள்ள தூய ஆவியாரின் உதவியை வேண்டுதல்.
- எமது ஆற்றல்கள் திறன்களை பிறரின் நல்வாழ்வுக்காக பயன்படுத்துதல்.
- நாம் எதற்கும் தகுதியற்றவர்கள் என எம்மைத் தாழ்த்தி ஒதுங்கிவிடாது முன்னோக்கி வளர பெற்றோர், ஆசிரியர்கள், அருட்பணியாளர்களின் வழிகாட்டல்களை நாடுதல்.
- பலவீனமானவர்களையும் இறைவன் தமது பணிக்கு தெரிவு செய்கிறார்
- தாயின் வயிற்றில் இருக்கும் போதே இறை பணிக்கு தெரிவு செய்யப்பட்டதுபோல் இறைவன் கருவிலேயே எம்மை இறைபணிக்கு தெரிவு செய்துள்ளார்.
- முன்மாதிரியான வாழ்வை வாழவேண்டும்
- அவரைப் போன்று பொறுப்பெடுத்த விடயங்களை சரியாக நிறைவேற்ற வேண்டும்
- இறைவன் மீது நம்பிக்கையை வளர்த்தல்
- இறை அரசைப் பரப்ப கடின உழைப்பை மேற்கொள்ள வேண்டும்.

**(இது போன்ற கருத்துக்களை முன்வைத்து விளக்கியிருப்பின் ஐந்து விடயங்களுக்கு ஐந்து புள்ளிகள் வழங்குக.)**

**(2 + 3 + 5 = 10 புள்ளிகள்)**

**6. கற்றல் பேறு -: கத்தோலிக்க திருமணத்தின் நோக்கங்களை அறிந்து வெற்றிகரமான திருமண வாழ்க்கைக்கு ஆயத்தம் செய்வர்**

**(i) கத்தோலிக்க திருமணத்தின் நோக்கங்கள் இரண்டினையும் குறிப்பிடுக.**

- அன்னியோன்னிய அன்பால் முழுமையடைதல்
- குழந்தைகளைப் பெற்று அவர்களை வளர்த்தல்

**(ii) கத்தோலிக்க திருமணத்திற்குள்ள சட்டரீதியான தடைகள் மூன்றினை எழுதுக.**

- வயது – 18 வயதிற்குக் குறையாதிருத்தல்
  - 23 – 29 வயதிற்கிடையில் திருமணம் செய்தல்
- சுதந்திர விருப்பம் - தாம் விரும்பாத ஒருவரைத் திருமணம் செய்யும்படி யாராலும் கட்டாயப்படுத்த முடியாது.
- குற்றம் - ஒருவர் பிறர் தாரத்தை தனதாக்கிக்கொள்ள விரும்புதல்.
  - அவரது துணையாளரைக் கொல்லுதல்.
  - பிறரை அடைவதற்காக தனது தாரத்தைக் கொல்லுதல்.
  - இவ்வாறு குற்றம் புரிந்தவருடன் திருமணம் செய்துகொள்ள முடியாது.
- இரத்த உறவு
- கலப்புத் திருமணம்

**(iii) "கிறிஸ்தவ திருமணவாழ்வை வெற்றிபெறச் செய்வோம்" என்னும் தலைப்பின் கீழ் நீர் எழுதும் கட்டுரையில் உள்ளடங்க வேண்டிய பிரதான விடயங்கள் ஐந்தினை எழுதுக.**

- திருமண வாழ்வு இறைவனின் மாபெருங் கொடை ஆகும்.
- திருமண அருளடையாளத்தை நிறைவேற்றுபவர் திருமணத் தம்பதிகளே.
- கிறிஸ்தவ திருமணத்தில் மேற்கொள்ளப்படும் உடன்படிக்கை மூலம் அவர்களது இல்லற வாழ்வு ஆரம்பமாகிறது.
- கிறிஸ்தவ திருமணம் ஆலயத்தில் திருப்பலி வழியாக நிறைவேற்றப்படும் புனிதமான சடங்காகும்.
- திருமணத்தை நிறைவேற்றும் குருவானவர் அதன் சாட்சியாக இருப்பார்.
- இந்தப் புனிதமான உறவிலே ஒருவர் ஒருவருக்குப் பிரமாணிக்கமாக வாழ்ந்து குழந்தைகளைப் பெற்றுப் பேணிவளர்ப்பது பிரதான கடமையாகும்.
- ஒருமை, கட்டவிழாமை என்பன கிறிஸ்தவ திருமணத்தின் பண்புகளாகும்.
- எனவே அவர்கள் இருவரும் தாம் கொடுத்த வாக்குறுதியை இறுதிவரை நிறைவேற்ற வேண்டும்.
- தூய அன்புடன் ஒருவரை ஒருவர் ஏற்றுக்கொண்டு விட்டுக்கொடுத்து அறப்பணிகளை மேற்கொண்டு வாழும் போது திருமண வாழ்வு வெற்றிகரமானதாக அமையும்.

**(இது போன்ற கருத்துக்களை முன்வைத்து விளக்கியிருப்பின் ஐந்து விடயங்களுக்கு ஐந்து புள்ளிகள் வழங்குக.)**

**(2 + 3 + 5 = 10 புள்ளிகள்)**

**7. பின்வரும் தலைப்புக்கள் இரண்டினைத் தெரிவுசெய்து சிறுகுறிப்பு எழுதுக.**

**(ii) இயேசு திருத்தூதர் தோமாவுக்குக் காட்சி கொடுத்தல்.**

உயிர்த்த இயேசு திருத்தூதருக்கு காட்சி கொடுத்த வேளை திருத்தூதர் தோமா அங்கிருக்கவில்லை.
பின்னர் திருத்தூதர் மூலம் இயேசு காட்சியளித்தது பற்றி கேள்விப்பட்டபோதிலும் அவர் அதை நம்பவில்லை.
எட்டு நாட்களுக்குப் பின் மீண்டும் ஆண்டவர் இயேசு காட்சிகொடுத்து தோமாவின் அவநம்பிக்கையை நீக்கினார்.
அப்போது "என் ஆண்டவரே என் தேவனே" என தோமா தன் இறைநம்பிக்கையை வெளிப்படுத்தினார்.

**(ii) புனித மரியகொறட்டி**

தந்தையின் மரணத்திற்குப் பின் தனது அன்னையோடு வீட்டுப்பொறுப்புக்களை ஏற்று புனித மரிய கொறற்றி வாழ்ந்து வந்தாள்.
சகோதர சகோதரிகளோடு இறைவனுக்கு உகந்ததொரு வாழ்க்கையை நடத்தி வந்தாள்.
ஒரு நாள் அவள் வீட்டில் தனித்திருந்த வேளை அங்கு வந்த அலெக்சாண்டர் அவளைப் பாவச்செயலுக்கு உடன்பட தூண்டினான்.
அதனை அவள் எதிர்த்தமையால் அவன் அவளைக் கத்தியால் குத்தினான்.
அவள் இறக்கமுன் தனது அன்னையை விளித்து "அம்மா நான் முதன் முறையாக நற்கருணை பெற்ற போது, இறக்க நேர்ந்தாலும் எனது இறைவாழ்வை இழந்து விட மாட்டேன் என இயேசுவிடம் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றினேன்" எனக்கூறி கண்மூடினாள்.
இறக்கும் போது அவளுக்குப் பன்னிரண்டு வயது ஆகும்.

**(iii) ஞாயிற்றுக்கிழமைகளிலும் கடன் திருநாட்களிலும் முழுத்திருப்பலியில் பங்குபற்றுதல்**

இது திருச்சபைச் சட்டங்களில் முதன்மையானது ஆகும். இறைமக்களாகிய நாம் இறைவனுக்கு ஒப்புக்கொடுக்கும் பலியே திருப்பலி.
இப்பலி குருவானவரின் தலைமையில் நிறைவேற்றப்படினும் அனைத்து இறைமக்களும் அப்பலியில் பங்கேற்கின்றனர்.
திருப்பலி உன்னதமானது. இதனால் கதைத்துக்கொண்டும் கவனமின்றியும் வேறு சிந்தனைகளில் ஈடுபட்டுக்கொண்டும் திருப்பலியில் பங்கேற்பது திருப்பலியின் குறிக்கோளுக்கு முரணானது.

அவ்வாறு நடந்துகொள்பவர்கள் ஏனையோரின் நம்பிக்கைக்கும் பக்திக்கும் இடையூறாக இருப்பதால் அத்தகைய செயல்களைத் தவிர்த்து பயபக்தியுடன் நடந்துகொள்ள வேண்டும்.
ஞாயிறு தினத்தில் அல்லது வேறொரு கடன் திருநாள்த் திருப்பலியில் பங்குபற்றும் கடமையை அன்றைய தினத்திற்கு முதல்நாள் ஞாயிறு திருப்பலிக்காக ஒப்புக் கொடுக்கப்படும் மாலைத் திருப்பலியில் பங்குபற்றி நிறைவேற்ற முடியும்.
எமது பங்கு ஆலயத்தில் ஞாயிறு திருப்பலி நடைபெறுமிடத்து எமது வசதிக்காக சனிக்கிழமை மாலைத் திருப்பலியில் பங்குபற்றுவதை பழக்கமாக்கிக் கொள்ளக்கூடாது.
ஞாயிறு திருப்பலியை ஒரு சுமையாகக் கருதக்கூடாது. அன்புள்ள இறைவன் மட்டில் கொள்ளும் அன்பையும் நன்றியையும் வெளிப்படுத்தும் செயலாகக் கருதவேண்டும்.
முழுத்திருப்பலியில் பங்குபற்றுதல் என்பது வருகைப்பாடல் தொடங்கி முடிவுப்பாடல் வரை திருப்பலியில் பங்குபற்றுவதாகும்.
திருப்பலி ஆரம்பிப்பதற்கு சிறிது நேரத்திற்கு முன் ஆலயத்திற்கு வருகைதந்து மனதை ஒருநிலைப்படுத்தி தனிச்செபத்தில் ஈடுபட்டு எம்மை தயார்படுத்துவது சிறந்த செயலாகும்.
பாடல்கள் செபங்களில் பங்குபற்றி இறைவார்த்தையை நன்கு செவிமடுத்து மறையுரையினால் விளக்கம்பெற்று நற்கருணையில் எம்மையும் பலியாக்குவது அர்த்தமுள்ளதாகும்.
திருப்பலிக்குச் செல்ல முடியாத சந்தர்ப்பங்களாவன

- நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் இருத்தல்
- அண்மித்த ஆலயங்களில் திருப்பலி நடைபெறாமை
- வீட்டில் நோயாளிகளைத் தனியே விட்டுச்செல்ல முடியாமை

## (iv) புனித மரியா பரிசுத்த திருச்சபையின் அன்னை

இயேசு சிலுவையடியில் தம் தாயைத் தான் அன்பு செய்த திருத்தூதரிடம் ஒப்படைத்தார்.
இயேசுவின் விண்ணேற்றம் வரை திருத்தூதர்களுடனும் ஏனைய மக்களுடனும் கூட இருந்த மரியன்னை அதன் பின்பும் அவர்களை விட்டுப் பிரியாமல் அவர்களுடன் ஒருமனதாய் இடைவிடாமல் செபத்தில் ஒன்றித்திருந்தார்.
கதிம எண் 963 மரியன்னை இயேசுவின் அன்னையும் பரிசுத்த திருச்சபையின் அன்னையும் என்பதைத் தெளிவுபடுத்துகின்றது.
திருத்தந்தை புனித 6வது பவுலின் 'மிஸ் டேறியும் பிடேயி' அல்லது 'விசுவாசத்தின் மறைபொருள்' என்ற சுற்றுமடலும் மரியன்னை உலகில் வெவ்வேறு பகுதிகளில் காட்சி கொடுத்துக் கூறிய செய்திகளும் மற்றும் அன்றாட வாழ்க்கையில் நாம் அனுபவித்த அவரின் பரிந்துரைகளும் மரியன்னை பரிசுத்த திருச்சபையின் அன்னை என்பதை உறுதிப்படுத்துகின்றன.
பற்பல இடங்களில் காட்சிகொடுக்கும் மரியன்னை தம் பரிந்துரைகள் மூலம் பரிசுத்த திருச்சபையின் அன்னையாக இன்றும் உள்ளார்.

அன்றுபோல் இன்றும் மரியன்னை தொடர்ந்தும் திருச்சபைக்காக செபிக்கிறார்.

காட்சிகள் ஊடாகவும் செபத்தினுடாகவும் எம்முடன் செயலாற்றுகிறார்.

**(5 + 5 = 10 புள்ளிகள்)**